**திரு. இராம. அரங்கண்ணல் :** அரசாங்கக் க்யூட்டராகப் பணி புரிந்த டாக்டர் பாலிகா அவர்கள் எழுதியுள்ள நூலில், கோவை மாவட்டம், சேலம் மாவட்டம், நீலகிரி மாவட்டம், திருச்சி மாவட்டத்தின் சில பகுதிகள், ஆகிய இடங்களில் இரும்புக்கனி கிடைப்பதற்கு வசதிகள் உள்ளன என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த இடங்களிலே கிடைக்கின்ற கனிகளைக் கொண்டும் சேலம் ஆலை இயங்குமா ?

**கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் :** 'இரும்புக் கனி கிடைக்கும்' என்று ஜியாலஜிஸ்ட் எழுதிவிட்டால் மாத்திரம் ஆலை துவங்க முடியாது. எவ்வளவு கிடைக்கின்றது என்று பார்க்கவேண்டும். இரண்டாவது, அந்தக் கனியினுடைய இரும்புச் சத்து ('Fe' content) எவ்வளவு என்று பார்க்கவேண்டும். நம்முடைய இராஜ்யத்தில் மட்டுமல்ல; பல பகுதிகளிலும் குறைவான சத்துள்ள இரும்புக் கனி பரவலாகக் கிடைக்கிறது. அதை எடுத்து கட்டுபடியாகக் கூடிய முறையில் உபயோகப்படுத்த முடியாது. அதனால்தான், இந்த சேலம் இரும்பைக் குறித்து இப்பொழுது நாம் தனியாக முயற்சி செய்து வருகிறோம்.

**திரு. மு. கருணாநிதி :** இரும்புத் தொழிற்சாலை சேலத்தில் அமைக்கப்பட இருக்கிறதா ? அல்லது நெய்வேலியிலா ?

**கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் :** முடிவு இன்னும் எடுக்கப்படவில்லை.

**திரு. கே. ஏ. மதியழகன் :** டில்லி துணை அமைச்சர் திரு. பட்டாபிராமன் அவர்கள், 'சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை அமையாவிட்டாலும், தேனிரும்புத் தொழிற்சாலையாவது அமையும்' என்று பேசியதாக பத்திரிகையிலே ஒரு செய்தி வெளிவந்திருக்கிறது. அமைச்சர் அவர்கள் அடிக்கடி, திரும்பத் திரும்ப, 'சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை நிறுவப் போகிறோம்' என்று சொல்லி வருவதால், வழக்கம்போல் இதுவும் இல்லாமல் போய் விடுமா ? அல்லது, நிச்சயமாக இப்படிப்பட்ட இரும்பு உருக்குச் சாலை அமைக்கப்படும் என்று உறுதி கூற முடியுமா ?

**கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் :** அவரவர்கள் மனம் போல் மாங்கல்யம் வரும் என்று நினைக்கிறேன். (சிரிப்பு).

SRI K. S. G. HAJA SHERIFF : What is the percentage of iron-content in the Salem iron ore?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the 'Fe' content varies from place to place. The average would be between 36 and 42 per cent. But the ore cannot be used as such. It will have to be beneficiated to 62 per cent.

### கைத்தறித் துணிகளுக்கு 'ரிபேட்'.

*66 கேள்வி.—**திரு. சா. கணேசன் :** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கைத்தறி நெசவாளர் வளம் பெறுவதற்காகக் கொடுக்கப்பெறும் 'ரிபேட்' ஒழுங்காக உரியவர்கட்குப் போய்ச் சேரவில்லை என்பதை அரசாங்கம் அறியுமா ?

(இ) இது விஷயமாக அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

(உ) குறி போட்ட வேட்டி, சேலை முதலியவற்றைக் கைத்தறிகள் மட்டுமே நெய்யலாம் என்று வரம்புகட்டி உத்தரவிட அல்லது விதி செய்ய அரசாங்கம் உத்தேசித்துள்ளதா ?

THE HON. SRI R. V7NKATARAMAN : (அ) The Government have not received any complaints that the rebate which is intended for consumers of handloom colth does not reach them.

(இ) Does not arise.

(உ) A ban has already been imposed by the Government of India on the Mills from producing certain varieties of bordered dhoties, sarees, etc. Those varieties can be produced by handlooms only.

திரு. சா. கணேசன் : பல கூட்டுறவுச் சங்கங்களில் விற்காமலும் வாங்காமலும் கணக்கு எழுதப்படுவதாகப் பரவலாக இருக்கிற புகாரைப் பற்றி விசாரித்து, தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் : கனம் அங்கத்தினர் அவர்கள் இந்தச் சபையில் சென்ற முறை இல்லை. அந்த விதமான புகார் வந்தபோது, விற்காமலும் வாங்காமலும் இருந்து ரிபேட் கோரினால், 'ரிபேட் கொடுக்க முடியாது' என்று மறுத்து, ரிபேட் கொடுக்காமலிருந்துவிட்டோம். அந்த விதமான புகார்கள் இப்பொழுது இல்லை.

திரு. கோ. வெங்கட்ராமன் : விற்பனை அடிப்படையில் வசூலிக்கப்படுகிற செஸ் நிதியிலிருந்து ரிபேட் அளிக்கப்படுவது பரவலாக கூட்டுறவுத் துறையில் இருப்பவர்களுக்கு மட்டும் தான். நெசவாளர் சமுதாயம் முழுவதற்கும் அந்த ரிபேட் கொடுக்கப்படுவதில்லை. ஆகவே, இன்ஷ்யூரன்ஸ், ப்ராவிடென்ட் பண்டு முதலிய சலுகைகள் அளிக்கும் திட்டமாக அதை மாற்ற அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் : இது சம்பந்தப்பட்ட மான்யக் கோரிக்கை வரும்போது, கனம் அங்கத்தினர் அவர்கள் இதைப்பற்றி விஸ்தாரமாக தம்முடைய அபிப்பிராயத்தைச் சொல்லலாம்.

திரு. க. ர. நல்லசிவம் : ரிபேட் கொடுப்பதை நிறுத்திவிட்டு, சமீபத்தில் மத்திய சர்க்கார் கைத்தறித் துணி மீது போட்டிருக்கக்கூடிய வரியையும், நூல் மீது போட்டிருக்கக்கூடிய வரியையும் ரத்து செய்யும்படி நம்முடைய மாநில சர்க்கார் மத்திய சர்க்காருக்கு யோசனை கூறியதா ?

கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் : அந்த யோசனை நம்முடைய இராஜ்யத்திற்கு நல்லதல்ல.

MR. SPEAKER : Questions are over.